**காண்டத்தின்** ௪-வது அத்தியாயத்துப் ௧௮-வது சுலோகத்திற் "சகல பாபநாசனை கந்தபிரானது மகிமையை (அகத்தியனார்) எடுத்துரைத்தனர்" என வருமாற்றானே மேலென்ற பொருளெவைக்கும மேற்பொருளாய சுப்பிரமணியத்தின் திருவடிக் கமலங்களிற் படிந்த நுண் துகள்களைப் பரமசிவன் புயங்களும் பார்வதி தனபாரங்களுஞ் சென்னிப் பொருந்தி வாழ்ந்தனவே. அத்தகைய திருவடிக் கமலங்களை யிடைவிடாது தாங்கியுள்ள அம்மஞ்ஞையானது உபதேசகாண்டத்தின் ௪-ம் அத்தியாயத்து* ௭, ௮-ம் சுலோகங்களில் வருமாறு பிரமாவும் விஷ்ணுவும் ஏனைய வுயிர்கள் அதனைத் தொழாதிருக்குந் தரமுடையன அல்ல. இதுவேயுமன்றி, சடக்ஷரேசனது ஊர்தியாகிய அம்மயிலின் நாமமும் ஆயுதமாகிய வேலின் நாமமும் 'வேலும் மயிலும்' என்ற ஒரு மகாமந்திரமாகும். அதனை அடிக்கடி யுச்சரிப்பார்க்கு உலகில் அரியகாரியமொன்றுமின்றென் றுணர்வதோடு முன்சொற்ற அருணகிரிநாதசுவாமிகள், சக்தி பிரசன்ன சித்தியுடைய சம்பந்தாண்டா னென்பான் விளைத்த தெய்வவாதத்தில் அவனைவெல்லும் நிமித்தம் அருணசலேசர் சன்னிதிக்கண் ஒரு கற்கம்பத்தடியில் முருகப்பெருமானை வருமாறு பிரார்த்தித்தபோது அவன் வராமைகண்டு தோத்திரித்த நிமிடம் அது, தன்னிறைவனைச் சுமந்து மயிலைத் வந்து அம்பர்த் தரிசனங்கொடுத்து நடித்த சமயசஞ்சீவி யென்பதையும் அறி. மேலே, ஆதிக் கருத்தென்றது குறித்து ஈண்டு விளக்குவதென்னை யெனின்,—

---

*இச் சுலோகங்களில் வருவிவரத்தை ௭௬-ம் கடாவிடை ...ல் "உபதேச காண்டத்தின் ௪-வது அத்தியாயத்து ௭, ௮-ம் ...லோகங்களில்" என்னுமிடத்திற் காண்க.



முன்னொரு கற்பத்திற் சாகத்தீவை யாண்ட பிரபாகர ராசனுடைய மனைவியிடம் ஒரு கருப்பத்தி லிரண்டு பிள்ளைகளும் மற்றிரண்டு கருப்பங்களி லிரண்டு பிள்ளைகளுமாகப் பிறந்த சூரன், பதுமன், சிங்கன், தாரகன் என்னு நால்வர்களுட் சூரனும் பதுமனும் அகத்திய மாமுனிவர் போதகப்படி சன்மய சண்முகக் கடவுளின் மயூரவாகனமாகவுங் குக்குடத்துவசமாகவுந் தாங்கள் சேரவேண்டுமெனவும், சிங்கனுந் தாரகனுந் திரணபிந்து முனிவர் விருடபயோகி முனிவர் போதகங்களின்படி காளியின் சிங்கவாகனமாகவும் மகாசாத்தாவின் யானைவாகனமாகவுஞ் சேரவேண்டுமெனவுங் கருதிப் பூமி புரத்தலைப் புத்திரர்பால் நல்கிவிட்டுப் பஞ்சாக்கினி மத்தியினின்று நாற்பதினாயிரம்வருடந் தவம் பயின்றனர். அவ்வமையம் பரமசிவ தரிசனத்திற்காகக் கைலைக்கு வந்திருந்த சண்முகக்கடவுள் அரி அயன் மகாசாத்தா காளி முதலியோர் வாகனங்களுட் கருடன் அன்னம் முதலிய வாகனங்கள், "மயில் சேவல் சிங்கம் யானை யென்பவைகளைக் கண்ணுறீஇச் சூரனாதியோர் தவஞ்செய்யுங் கருத்தைத் தெரிவித்தவுடன் அம்மயிலுஞ் சேவலும் யானையுஞ் சிங்கமும் அவர்களின் தவநிலையைக் கெடுத்து, "நீவிர் எங்கள் பதவிகளை பிச்சித்தமையால் எங்கண் முகங்களுடைய பூதங்களாகக் கடவீர்" என்று சபித்தன. அவ்வணம் பூதங்களாகிய நால்வரும் கைலையிற் றங்கியிருந்த மயில்முதலிய நான்கனையுங்கண்டு வந்தித்து, "அடியேங்கள் கருத்து முற்றுப்பெறுங்கொலோ?" என்றறிந்து கேட்டலும் அவைகள் மனமிரங்கி, "நீயிர் இக்கைலைக் கணங்களுடன் சின்னாளிருப்பீரேற் சத்தியமாக முற்றுப் பெறும்" என இயம்பின. அவ்வாறு நால்வரும் அண்டாவரண பூதங்களோடிருக்குங்கால் யுத்தத்தில் அசுரருக்கிளைத்தோடிய உம்பருக்குச் சகாயமாக அந்நால்வரும்